# சாதனையும் சத்சங்கமும்

## [SADHANA & SATSANGA]





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# சாதனையும் சத்சங்கமும்

அருளியவர் :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. T. M. லோகநாதன், M. A., B. Ed.,






வெளியிடுவோர் :

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

தமிழ்நாடு.

விலை ] 1989 [ ரூ. 3-00

O * O

Translation of

"SADHANA & SATSANGA"

in Tamil

O * O

*Printed out of the magnanimous donation of*

| | | |
|---|---|---|
| Sri V. R. Annamalai | Malaysia | Rs. 575 |
| Smt Rukmani Krishnasamy | ,, | 413 |
| Sri Swami Guha Bhaktananda | ,, | 300 |
| Smt & Sri. S. Vijayaratnam | ,, | 300 |
| Smt & Sri. S. Nesadurai | ,, | 300 |
| Sri S. Rethinam | ,, | 300 |
| Kavi Kanchi Dasan | ,, | 300 |
| Smt Valli Rajan | Singapore | 300 |
| Smt Parvathi Sundaram | ,, | 300 |

Printed at The Literary Press, Salem - 636 001

# சாதனையும் சத்சங்கமும்

சாதனை (ஆன்மீகப் பயிற்சி) ஒரு தெளிவான முறைபடுத்தப்பட்ட ஆன்மீக இயக்கமாகும். நாம் இவ்வுலகில் அந்த ஆன்மீகப் பயிற்சியைப் பெறுவதற்கே பிறந்திருக்கிறோம்.

அப்யாசம் என்பதும் சாதனை என்பதும் ஒன்றே. ஆன்மீகப் பயிற்சியின் குறிக்கோள் நம்மைப் பிணைத்துள்ள விலங்குகளிலிருந்து விடுதலை பெறுவதே.

ஆன்மீகப் பயிற்சியை நம் வாழ்நாள் முழுவதும் செய்யவேண்டும். ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணி நேரமும், ஒவ்வொரு நிமிடமும் நாம் முன்னேற்றப் பாதையில் செல்ல வேண்டும். வழியில் ஏராளமான இடையூறுகள் வரும். ஆனாலும் நீ கடவுளை வழித்துணையாகக் கொள்ளும் போது உனக்குக் கஷ்டங்கள் ஏற்படா. நீ நிச்சயமாக எதிர் கரையை அடைவாய்.

சிலருக்கு ஆன்மீகப் பாதையில் செல்ல ஆர்வம் ஏற்படுகிறது. அவர்களுக்கு உண்மையான விடுதலை வேட்கை கிடையாது. சில யோக அப்யாசங்களைச் செய்தால், அவர்களுக்குச் சில அசாதாரண ஆற்றல்கள் ஏற்படும் என்றோ, சித்தி கிடைக்கும் என்றோ நினைக்கிறார்கள். அவர்கள் நினைத்த சித்தி அல்லது ஆற்றல்கள் கைகூடாத போது, அவர்கள் பொறுமை இழக்கிறார்கள்; ஆன்மீகப் பயிற்சி செய்வதை விட்டு விடுகிறார்கள். யோகத்தையும், யோகிகளையும் எள்ளி நகையாடுகிறார்கள்.

வெறும் ஆரம்ப கால ஆர்வம் மாத்திரமே ஆன்மீக முன்னேற்றத்தைக் கொடுத்து விடாது.

விஷமச் செயல்களைச் செய்கிறவர்களைக் காட்டிலும் வெறும் ஆர்வத்தைத் தூண்டுபவர்கள் மிகவும் வெறுக்கப்பட வேண்டியவர்கள். உன்னையே நீ ஆராய்ந்து பார். உன் எண்ணங்களை ஆராய்ந்து பார். உனக்கு உண்மையில் ஆன்மீக தாகம் இருக்கிறதா அல்லது வெறும் ஆரம்ப கால ஆர்வம் மட்டும்தானா என்பதை உறுதி செய்துகொள். வெறும் ஆர்வம் மட்டும் இருந்தால் அதை இடைவிடாத ஆன்மீகப் பயிற்சியாக மாற்றிக்கொள். சத்சங்கம், நல்ல அறநூல்களைப் படித்தல், ஜெபம், பிரார்த்தனை, தியானம் ஆகியவைகளே அதற்கு ஏற்ற சாதனங்களாகும்.

உன் ஆன்மீகப் பயிற்சியில் உனக்கு விருப்பமும் அக்கறையும் வேண்டும். ஆன்மீகப் பயிற்சியின் முறைகளையும், பயன்களையும் அறிந்து கொள்ள வேண்டும். உனக்கு ஏற்ற ஆன்மீகப் பயிற்சி ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். அதைத் திருத்தமாகச் செய்வதற்கேற்ற ஆற்றலும், திறமையும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஆன்மீகப் பயிற்சியின்போது மகிழ்ச்சியும், அதில் முழு வெற்றியும் கிட்டும்.

## அடங்கா ஆசையும், சாதனையும்

நல்லெண்ணம் மட்டும் ஒன்றையும் சாதித்து விடாது. நீ விரும்பும் வெற்றியைத் தேடித் தராது. நற்செயல்கள் நற்சிந்தனையின் பக்க பலமாக இருக்க வேண்டும். அதற்கு நீ மிகவும் விழிப்பாகவும், விடாமுயற்சி உள்ளவனாகவும் இருக்க வேண்டும். கடுமையான ஆன்மீகப் பயிற்சியைச் செய்ய வேண்டும். காமம், கோபம், பேராசை, அஹங்காரம், தன்னலம் ஆகியவை உன்னை அணுகாமல் காத்துக் கொள்ள வேண்டும்.

இறையுணர்வை நாடுவோருக்கு முதற் படிகளாக தூய ஒழுக்கமும், ஆன்மீகத்தில் அடங்கா ஆர்வமும் இருக்க வேண்டும். ஒழுக்கத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை இல்லையெனில் ஆன்மீக வாழ்க்கையும் இல்லை, இவ்வுலகில் நல் வாழ்க்கையும் இல்லை.

சுய கட்டுப்பாடு மிகவும் அவசியம். அதற்கு ஆசைகளை அடக்கிக் கொள்வது என்று அர்த்தமல்ல. அவைகளின் முரட்டுத் தன்மைகளை மிருதுவாக்கி நம் வசப்படுத்த வேண்டும். அதன் நோக்கம் மிருக உணர்வை மனிதத் தன்மையாக்கி, மனிதத் தன்மையை தெய்வத் தன்மையாக்குவதே ஆகும்.

விதை விதைப்பதற்கு முன் நிலத்தைத் திருத்தி அமைப்பதுபோல் மனத்தைப் பண்படுத்த வேண்டும். அப்பொழுது விதை எளிதில் முளைத்து செடியாக வளர்கிறது. ஆக்கத்திற்கு முன் அழிவு ஏற்படுகிறது. இதுவே இயற்கையின் மாறாத விதியாகும். ஆகையால் உன் மனத்தில் உள்ள மிருக உணர்வுகளை அழித்து, அதை இறை உணர்வாக வளர்த்துக் கொள்ள வேண்டும்.

ஆன்மீகப் பாதை கரடுமுரடானது; முட்கள் நிரம்பியது; மிகச் செங்குத்தானது; முட்களை பொறுமையுடனும், விடா முயற்சியுடனும் களைய வேண்டும். சில முட்கள் மனத்தில் உள்ளன, சில முட்கள் வெளி உலகில் உள்ளன. காமம், பேராசை, கோபம், வீண் கர்வம், அகந்தை முதலியன மனத்தில் உள்ள முட்கள். தீயவர்கள் சேர்க்கை மனத்தின் வெளியில் இருக்கும் முள். இது தீமை எல்லாவற்றிலும் மிகவும் கொடியது. ஆகையால் தீயோர் சேர்க்கையை ஈவு இரக்கமின்றி தவிர்த்து விடு.

ஆன்மீகப் பயிற்சியின் போது மற்றவர்களுடன் அதிகம் நெருங்கிப் பழகாதே; அதிகம் பேசாதே; அதிக தூரம் நடக்காதே; அதிகம் சாப்பிடாதே; அதிகம் தூங்காதே. இந்த ஐந்து விதிகளையும், ஜாக்கிரதையாகக் கடைப்பிடி. மற்றவர்களுடன் அதிகம் நெருங்கிப் பழகுவதனால் மனதில் மாசு படிகிறது; அதிகம் பேசுவதனால் மனது தவறான பாதையில் வெகு தூரம் சென்றுவிடுகிறது. அதிக தூரம் நடப்பதால் உடம்பு களைத்து, மெலிந்து விடுகிறது. அதிகம் சாப்பிடுவதனால் சோம்பலும், தூக்கமும் ஏற்படுகின்றன.

## பெண்களுடனும், லௌகீகப் பொருள்களுடனும் நெருங்கி உறவாடுதலில் ஏற்படும் ஆபத்துகள்

ஆன்மீகப் பயிற்சியின் போது பெண்களுடன் பழகாதே. குறிப்பாக இளம் பெண்களுடன் பழகாதே. உனக்கு எவ்வளவு மன வலிமை இருந்தாலும் பழகாதே. மாயை உன்னையும், அறியாமல் உன் உள் மனத்தில் புகுந்து உன்னைச் சாய்த்து விடும்.

உன் மனம் முழுவதும் ஆன்மீக வாழ்விற்கான லட்சியம் நிறைந்திருக்கட்டும். உன் உணர்ச்சிகளைத் தூண்டும் பொருள்களிலிருந்து வெகுதூரம் விலகி இரு. அதுவே பத்திரமான நிலையாகும்.

இல்லறத்தாருடன் நெருங்கிப் பழகாதே. ஆன்மீகப் பாதையில் செல்லும் ஆரம்ப கட்டத்தில் உன் திறமையையும், தூய நிலையையும் சோதிக்காதே; தீயவர் தொடர்பை விலக்கு. அது பெருந்தவறாய் முடியும். முடிவில் வீழ்ச்சி அடைவாய்.

மற்றவர்களைப் பின்பற்றும் தன்மை மனத்திற்கு மிக உண்டு. ஆன்மீகப் பயிற்சி பெற விரும்புவோர் இல்லறத்தாருடன் சேர்ந்து இருந்தால் மனம் லௌகீக விஷயங்களில் ஈடுபட ஏதுவாகும். அதனால் மனம் எளிதில் வீழ்ச்சி அடைந்து விடும்.

ஆன்மீகப் பயிற்சியாளன் ஜமீன்தார் போன்ற செல்வந்தர்களுடன் கூடிப் பழகினால், இவனும் அவர்களைப் போன்ற ஆடம்பரமான பகட்டான வாழ்க்கையை மேற்கொள்ளுவான். தீய பண்புகள் அவனை அறியாமல் மனதில் புகுந்து விடும். அவைகளை வெல்ல முடியாமல் முடிவில் அவனுக்கு அழிவு உண்டாகும்.

ஆன்மீக சாதகன் வெகு காலம் தன் சொந்த ஊரில் வசிக்கக் கூடாது. சொந்த ஊரின் சூழ்நிலைகள் அவனுக்கு ஏற்றதாக இருக்காது. சூழ்நிலைக்கு அடிமையாகும் மனம் அவனை ஆபத்தில் ஆழ்த்திவிடும். நிர்விகல்ப அவஸ்தையைக் கைவரப் பெற்றவர்கள் மட்டும் அச்சூழ்நிலையை சமாளிக்க முடியும். ஆரம்ப நிலையில் உள்ள சாதகனுக்கு ஏற்றது அல்ல.

## ஆன்மீகப் பாதை

ஆரம்பக் கட்டத்தில் ஆன்மீகப் பாதை கடினமாகவும், முட்கள் நிறைந்ததாய், வழுக்கலாயும் இருக்கும். லௌகீகப் பொருள்களைக் கைவிடுதல் கஷ்டமாக இருக்கும். உறுதியுடனும், தீர்மானத்துடனும், இடையறாது போராடினால், அப்பாதை உனக்கு ஏற்றதாகிவிடும். அப்பொழுது உனக்கு ஆர்வமும், மகிழ்ச்சியும் ஏற்படும். உன் உள்ளம் விரிவடையும். வாழ்க்கையைப்

பற்றி உன் உள்ளம் தெளிவடையும். உன் உள்ளத்தில் உறையும் இறைவனின் உதவியைப் பெறுவாய். உன் உள்ளத்தில் ஏற்படும் சந்தேகங்களுக்கான தெளிவான விடையைப் பெறுவாய். இறைவனின் இனிய குரலோசையைக் கேட்பாய். உன் மனதில் விவரிக்க முடியாத பேரானந்தத்தை உணர்வாய். உன் மனதில் நீங்காத, குறையாத, சஞ்சலமில்லாத, ஆழ்ந்த அமைதியையும் உணர்வாய். அதுவே பேரானந்தம். அது உனக்கு அளவில்லாத ஆத்ம சக்தியைக் கொடுக்கிறது. ஆன்மீகப் பாதையில் உனக்கு உறுதி அளிக்கிறது. ஜீவன் முக்தர்களும், யோகிகளும், நித்ய சித்தர்களும், அமரர்களும், சிரஞ்சீவிகளும் உனக்கு உதவுவார்கள். இந்த உண்மையை உறுதியாக உணர்வாய்.

பிரபஞ்சத்தில் எங்கும் நிறைந்திருக்கிற இறைவனின் சக்தியை எப்பொழுதும் உணர்வாய். ஆகையால் நீ எதற்கும், எப்பொழுதும் பயப்பட வேண்டிய அவசியமில்லை. நீ ஆன்மீகப் பயிற்சியை முறைப்படி மேற்கொள்; அது உன்னைக் காப்பாற்றும்.

சில சாதகர்கள் குறுகிய காலத்தில் பெரும் சித்தியை எதிர்பார்க்கிறார்கள். அவர்களுக்கு எதிர்பார்த்தபடி பலன் கிடைக்கவில்லை என்றால் சாதனையை கைவிட்டு விடுகிறார்கள். சாதனையை குறை கூறுகிறார்கள். அவர்கள் சாதனையைப் பற்றி ஒன்றும் அறியாதவர்கள். சாதாரண மனிதனின் உணர்வுக்கும், சாதனை கைவரப் பெற்ற சாதகனுக்கும் இடையே அநேக வேற்றுமைகள் உள்ளன; பல்வேறு திரைகள் விலக வேண்டும். அநேக படிகளைக் கடந்தாக வேண்டும். அவைகளின் பிறகே பேரானந்தம் கிட்டுகிறது.

# ஆன்மீக முன்னேற்றம் சுருள் கம்பி போன்றது

எவரெஸ்ட் சிகரத்தை ஒரே தாவில் அடைய முடியாது. மூச்சு வாங்கி, பல மலைகளைக் கடக்க வேண்டும். அது போன்று ஆன்மீகப் பாதையிலும், பல கஷ்டங்களை அனுபவித்து பயணம் செய்ய வேண்டும்.

ஆன்மீகப் பயணத்தில் குறுக்கு வழி ஒன்றும் கிடையாது. ஆன்மீகப் பேரானந்தத்திற்கு நேரான, சுக்மான ராஜபாட்டை கிடையாது. கடுமையான மனக்கட்டுப்பாடும், ஒழுங்கும் வேண்டும். அப்போதுதான் நீ மாயையை வெல்ல முடியும்.

ஒரு சில அவசர புத்தியுடைய சாதகர்கள் தாம் மனதை முழுதும் கட்டுப்படுத்தி விட்டதாக நினைக்கிறார்கள். விரைவில் மாயையினால் வீழ்ச்சி அடைகிறார்கள். ஆனால் ஞானிகளும், யோகிகளும் மனதைக் கட்டுப்படுத்தி விட்டதாக ஒருபோதும் நினைப்பதில்லை. ஏனெனில் வாழ்க்கை, மனம், பிரகிருதி (இயற்கை) ஆகியவை ஒவ்வொரு விநாடியும் மாறிக் கொண்டே இருக்கின்றன என்பதை உணர்வார்கள். நீ அடைய வேண்டிய லட்சியம் இன்னும் மிக உயரத்தில் இருக்கிறது என்பதை உணர்ந்தால், உன் முயற்சி அதை நோக்கி மேலும் மேலும் உயரும், உன் இலக்கை அடைந்து விட்டதாக நீ நினைத்துக் கொண்டால், அதற்குப் பிறகு செய்யும் முயற்சி வீழ்ச்சியில் இறங்கிச் செல்லும்.

ஆன்மீகப் பயிற்சி மிகவும் கடினமானதாக இருப்பதால், ஆன்மீக முன்னேற்றம் மிகவும்

மெதுவாகவே ஏற்படும். ஆன்மீக முன்னேற்றம் கம்பிச் சுருள் போன்றது. ஆரம்பத்தில் கம்பிச் சுருளின் வட்டம் பெரிதாக இருக்கும். அடுத்தடுத்து வருகின்ற வட்டங்கள் சிறியதாகிக் கொண்டே வந்து ஒரு வட்டத்தின் மையத்தில் முடியும். அதற்கு இடையருது முயற்சி செய்ய வேண்டும். இவ்வாறு முயன்று சாதனை செய்யும் சாதகனுக்கு இறுதியில் எல்லையற்ற சக்தி வந்துவிடும்.

## ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறிகள்

நிசப்தமான இரவிலே மொக்கு அமைதியாக வெடித்து மலர் ஆவதைப் போன்று நம் உள்ளத்தில் ஆன்மீக முன்னேற்றம் ஏற்படுகிறது. உன்னை அறியாமல் நீ முன்னேறுகிருய். ஆகையால் தைரியத்துடன் இரு.

விழித்துக் கொண்டிருக்கும் வேளையில், உனக்கு மனதில் ஏற்படும் அமைதியான மனநிலையே நீ பெற்றிருக்கும் ஆன்மீக முன்னேற்றத்திற்கு சரியான அளவுகோல். உன் உடலும் உள்ளமும் ஆரோக்கியமாக இருக்கும்; உன் குரல் இனிமையாக இருக்கும்; முகம் தெளிவாக இருக்கும்; கண்கள் ஒளி பொருந்தி இருக்கும். நீ எப்பொழுதும் கலகலப்பாகவும், பயமின்றியும் இருப்பாய்; உணர்ச்சிக்கு வசப்படாமல், யாவரையும் சமமாகக் கருதுவாய். உலகத்து பொருள்கள் மீது உனக்குக் கவர்ச்சி இருக்காது. உன்னை மயக்கிய பொருள்கள் அற்பமாகத் தெரியும். நீ மேன்மேலும் தியானம் செய்ய விரும்புவாய். நீ மனதில் தெய்வீக ஒளி, காட்சி, மணம், சுவை ஆகியவைகளை உணர்வாய்.

உலகத்தில் உள்ள எல்லாத் தோற்றமும் இறைவனே என்ற எண்ணம் பலம் பெறும். எல்லா இடத்திலும் கடவுள் திருவுருவத்தையே காண்பாய். மற்றவர்களுக்குச் சேவை செய்யவேண்டும் என்ற தீவிரமான எண்ணம் உன் உள்ளத்தில் உண்டாகும்.

ஆன்மீகப் பாதையில் நீ முன்னேறிச் செல்கிருயா, பின்னுேக்கிச் செல்கிருயா அல்லது ஒரே இடத்தில் இருக்கிருயா என்பதை சோதனை செய்துபார். உன்னுடைய ஜபம், தியானம் அல்லது வேதாந்த சிந்தனைகள் உன் திரையை விலக்காமல், உன் அகந்தை மேலும் சக்தி பெற்றிருந்தால், அது ஆன்மீகப் பயிற்சி அல்ல, அது பில்லி சூன்யப் பயிற்சி. இதை நன்கு ஞாபகத்தில் வை. உன் மனத்தை உள் நோக்கி ஆராய்ந்து பார். ''தான்'' என்னும் அகந்தை இருந்தால், இரக்கமின்றி அழித்து விடு. ஏனெனில் அந்த அகந்தை உன் உள்ளத்தில் திருடனைப் போல் பதுங்கி இருந்து அவ்வப்போது பல்வேறு உருவங்களை எடுக்கும். அது பச்சோந்தி போன்றது. நாடக நடிகனைப் போன்றது.

ஆன்மீகப் பயிற்சியில் முன்னேறி, சிறிது இறை உணர்வைப் பெற ஆரம்பித்தவுடன் நிறுத்தி விடாதே. இடையருது முன்னேறு. இறை உணர்வில் ''பூமா'' என்னும் நிலைத்த இறை உணர்வு அடையும்வரை முன்னேறு. இடையில் நிறுத்தி விட்டு, பெயருக்கும், புகழுக்கும் அலையாதே. அதன் விளைவு உன் அழிவே. உதாரணங்கள் ஏராளமாக உள்ளன. நீ உன் மனைவி, மக்கள், வீடு வாசல், பெற்றோர்கள், நண்பர்கள், உற்றார்கள் ஆகியவர்களை எளிதில் விட்டு விடுவாய். ஆனால் பெயரையும், புகழையும்

விட்டு விடமாட்டாய். அகந்தை உன்னிடம் குடி கொண்டு விட்டது. நான் உன்னைக் கடுமையாய் எச்சரிக்கிறேன். இறை உணர்வில் பேரானந்தம் பெறுபவனுக்கு இதுவெல்லாம் ஒரு தூசு மாத்திரமே. லோகாயதர்களுக்கு இந்த உலகம் மிகப் பெரியது. ஆனால் ஆத்ம சாதகர்களுக்கு இந்த உலகம் ஒரு கடுகு, ஒரு துரும்பு, ஒரு நீர்க் குமிழ் போன்றது. ஆகையால் ஆத்ம சாதனையை இடையில் நிறுத்தி விடாதே. இறை உணர்வில் நிலைத்திருக்கும் வரை முன்னேறிச் செல்.

ஆன்மீகப் பாதையில் ஏற்பட்ட கடந்த காலத் தவறுகளை நினைக்காதே. அது தற்பொழுது உனக்கு வருத்தத்தையும், தளர்ச்சியையும் உண்டாக்கும். அதை விடுத்து அத்தவறுகளை எதிர் காலத்தில் மீண்டும் செய்யாமல் பார்த்துக் கொள். உன் மன வலிமையைப் பெருக்கி, புதிய உத்வேகத்துடன் செயல்படு.

தூண்டப்பட்ட நல்ல குணங்கள், பயிற்சி செய்யப்பட்ட தெய்வீக எண்ணங்கள், அடக்கப் பட்ட ஆசைகள், ஒடுக்கப்பட்ட தீய எண்ணங்கள், பொறுத்துக் கொள்ளப்பட்ட தீய சொற்கள் ஆகியவை உனக்கு மன ஆற்றல், நன்னடத்தை, குறைவற்ற பேரானந்தம் ஆகியவைகளைக் கொடுக்கின்றன.

எவ்வளவு சிறிய சாதனை செய்தாலும், அது உன் ஆழ் மனத்தில் பதிவாகிறது, வீணாவதில்லை. ஆன்மீக மலர்ச்சிக்கு உதவுகிறது. இதுவே ஆன்மீகச் சட்டம். ஒரு நாளும் தவறாது ஆன்மீகப் பயிற்சி செய். சிறிது சிறிதாகச் சேரும் அப்பயிற்சி, நீண்ட காலத்தில் ஒன்று திரண்டு, பேரானந்த மாகிய இறை உணர்வைக் கொடுக்கிறது.

இறை உணர்வை குறுகிய காலத்தில் பெற விரும்பும் சாதகன் இடையறாதும், ஒழுங்காகவும் பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். அத்துடன் தியானப் பயிற்சியும் இன்றியமையாதது. ஒரு முறை பெருகி ஓடும் ஆன்மீக ஓடையின் ஊற்றை வற்றாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

## ஆன்மீகப் பாதையில் ஏற்படும் தடங்கல்கள்

சாதகன் சில சமயங்களில் ஆன்மீகப் பாதையில் ஒரு இடத்தில் நின்று விடுகிறான், பயணம் தொடர்வதில்லை. சில சமயங்களில் திசை மாறி விடுகிறான் — சித்தி பெற்று அதன் வழி சென்று விடுகிறான். சில சமயங்களில் சாதகனுக்கு எதிர்ப்புகள் ஏற்படுகின்றன; ஆசை வலையில் விழுகிறான். சில சமயங்களில் சாதகனுக்கு, தான் இலக்கை அடைந்துவிட்டதாக தவறான எண்ணம் ஏற்படுகிறது; அதனால் சாதனையை நிறுத்தி விடுகிறான். சில சமயங்களில் சாதகனுக்கு சிரத்தையற்ற நிலை, உற்சாகமற்ற மந்த நிலையும் ஏற்படுகின்றன. ஆகையால் சாதகன் கப்பலைச் செலுத்தும் கேப்டனைப் போலவும், ஆபரேஷன் செய்யும் டாக்டரைப் போலவும் எப்பொழுதும் விழிப்பாக இருக்க வேண்டும்.

ஆன்மீகப் பாதையில் அநேக தடங்கல்கள் உள்ளன. ஒரு தடையை வென்றால், அடுத்தது இருமடங்கு வேகத்துடன் உன்னைத் தாக்கும். நாக்கின் சுவையைக் கட்டுப்படுத்தினால், அடுத்த இந்திரியம் வேகத்துடன் செயல்படும். பேராசையை வென்று விட்டால், கோபம் உன்னைத் தாக்கி, சாய்க்க வரும். அகந்தையை விரட்டி கதவை மூடினால், அது வேறொரு கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்துவிடும். ஆகையால்

சாதகனுக்கு நிறைந்த பொறுமை, இடையறாத முயற்சி, எப்பொழுதும் விழிப்பு, குறையாத சக்தியும் தேவையாகின்றன.

சாதகனே! உன் பாதையில் உறுதியாகவும், மாறாமலும், நிற்காமலும் முன்னேறிச் செல். மக்கள் உன்னை எள்ளி நகையாடுவார்கள், அதைப் பார்த்து அமைதியாக இரு; மக்கள் உன்னைக் குறித்துத் தவறான வதந்திகளைப் பரப்புவார்கள். அதைக் கேட்டும் அமைதியாக இரு. உன் பாதையிலிருந்து மாறாதே, நிற்காதே, வழியில் ஏற்படும் கஷ்டங்களுக்கு எந்த விலை கொடுத்தேனும், எந்தத் தியாகம் செய்தேனும் முன்னேறு.

## சாதனையை இப்பொழுதே துவக்கு

இப்பொழுதே சாதனையைத் துவக்கு; இப்பொழுதே வாழ்வைத் துவக்கு; இப்பொழுதே இறை உணர்வைப் பெறத் துவங்கு; இப்பொழுதே பேரானந்தத்துடன் இருக்க முயல்.

சாவு ஒவ்வொன்றும் நிலையாமையை உணர்த்துகிறது. ஒவ்வொரு மணி ஓசையும் ''சாவு நெருங்குகிறது'' என எச்சரிக்கிறது; ஒவ்வொரு நாளும் நம் வாழ்வைக் குறைக்கிறது. ஆகையால், சாதகனே! தாமதிக்காதே, தயங்காதே, உடனே சாதனையைத் துவக்கு.

இன்றைய நாள் உனக்கு புதிய பிறப்பு, சிறந்தது. சாதனையைத் துவக்கு. கடந்தகாலத் தவறுகளை இருகரம் குவித்து வழி அனுப்பி விடு. புதியவனாய், தூய்மையானவனாய் சாதனையை இப்பொழுதே துவக்கு. கடந்தகால

தவறுகளினுல் நல்ல பாடங்களேக் கற்று விட்டாய். ஆகையால் உன் ஆன்மீகப் பாதையில் இப்பொழுது புதிய தெம்புடன், நம்பிக்கையுடன், புதிய உறுதியுடன், விழிப்புடன் முன்னேறு.

வழி மாருதே, அஞ்சாதே, தயங்காதே, கலங்காதே, சந்தேகம் கொள்ளாதே, வாழ்வை வீணுக்காதே. உன்னில் அளவற்ற சக்தி குவிந்திருக்கிறது. நீ சக்தியின் பெரும் அணைத் தேக்கம். வழியில் எதிர்படும் ஒவ்வொரு தடங்கலும் வெற்றியின் படிகள். அவை உன் எண்ணத்தின் ஆற்றலே வளர்க்கின்றன. குறைகள் நிறைவையும், பாவங்கள் புண்ணியத்தையும் நினைவூட்டுகின்றன.

கடல் அலேகள் ஓயும்போது குளிக்கலாம் என்பது முடியாது. அதுபோன்று வாழ்வில் நிம்மதி ஏற்படும்போது ஆத்ம விசாரணே செய்யலாம் என்பதும் முடியாது; முதுமை வரும்போது சாதனேயைச் செய்யலாம் என்பதும் முடியாத ஒன்று. முதுமையில் ஒரு அரைமணி நேரம்கூட உட்கார முடியாது. உன்னுல் அப்போது கடுமையான தபஸ் ஒன்றும் செய்ய முடியாது. ஆகையால் இளம் வயதிலே சாதனேயைத் துவக்க வேண்டும். அதன் பலனே முதுமையில் அனுபவிக்க முடியும். எல்லேயில்லா பேரானந்தத்தை உணர முடியும்.

---

# சத்சங்கம்

தூசு, வீசும் காற்றிேைடு சேர்ந்தால், அது வானத்தில் மிக உயரத்தில் செல்லும்; அத்தூசு ஈர மண்ணேடு சேர்ந்தால், சேறு ஆகிறது; மணமிக்க மல்லிகையோடு சேர்ந்தால், அது நறு மணத்தைப் பரப்புகிறது; அசிங்கத்தோடு சேர்ந்தால், நாற்றத்தைப் பெறுகிறது. கிளி ஒன்று தீயவர்கள் சேர்க்கையில் இருந்தால் கெட்ட வார்த்தைகளைச் சொல்லும். சாதுக்கள் சேர்க்கையில் இருந்தால் அக்கிளி ''ராமா, ராமா, ரங்கா, ரங்கா'' என்று சொல்லும். அது போன்று சாதகன் ஒருவன் சாதுக்கள் சேர்க்கையில் உயர்ந்த தத்துவ ஞானத்தைப் பெற்று பேரானந்தத்தில் திளைக்கிறுன். அவன் குடிகார னுடன் சேர்ந்தால், அவனும் குடிக்கிறுன்; கெட்டவனுடன் சேர்ந்தால் கெட்டுப் போகிறுன்.

## தீயோர் சேர்க்கையின் தீய விளைவு

தீயவர் சேர்க்கையின் விளைவு மிகவும் தீமை யானது. சாதகன் மனம் நஞ்சாகிறது. இறைவன் பக்தியும், வேதங்கள் மீதுள்ள நம்பிக்கையும் இல்லாமல் போகின்றன்; பாவங்கள் உண்டாகின்றன.

மனம் எப்பொழுதும் மற்ருென்றை பின்பற்று கிறது. கெட்டவர்கள் சேர்க்கையில் ஒழுக்கங் கெட்ட நடத்தை, பிறர்க்குத் தீமை செய்யும் எண்ணங்கள், சிற்றின்பத்தில் திளைக்கும் எண்ணம், முகஸ்துதி, ஆணவம், அக்கிரமம் முதலிய தன்மைகள் வந்து சேர்கின்றன. நல்ல தன்மை களாகிய தூய்மை, உண்மை, இரக்கம் முதலியன அழிந்து போகின்றன.

பொய் பேசுபவர்கள், பிற பெண்களுடன் சேர்பவர்கள், திருடுபவர்கள், பிறரை ஏமாற்று பவர்கள், கபட வேஷதாரிகள், இங்கொன்றும் அங்கொன்றும் பேசுபவர்கள், புறங்கூறுபவர்கள், கோள் மூட்டுபவர்கள், கடவுள் பக்தி இல்லாத வர்கள், வேதங்கள், இதிகாசங்களை எள்ளி நகைப் பவர்கள் ஆகியோர் சேர்க்கையை எப்பாடு பட்டாகிலும் விலக்க வேண்டும். தீயோர் நட்பை விலக்க வேண்டும்.

இல்லறத்தாரோடு சேர்ந்திருப்பது மட்டும் சாதகனுக்கு தீமை விளைவிப்பது அல்ல. ஆபாசப் பாடல்களைக் கேட்பது; தீயவர்களின் தெருவில் வசிப்பது; சூதாட்ட விடுதிகள்; மதுக் கடைகள், விபச்சாரிகளின் வீடுகளின் அருகில் வசித்தல்; சினிமா கொட்டகைகள்; தாமஸ உணவுகள்; மிருகங்களின் சேர்க்கையைப் பார்த்தல்; காதல் கதைகளைப் படித்தல்; பெண்களைப் பற்றியே பேசுதல்; நிர்வாணப் படங்களைப் பார்த்தல், காமத்தைத் தூண்டும் அரைகுறை ஆடைகள், இறைவனையும், வேதங்களையும் நிந்திக்கின்றவர்கள், அபினி, கஞ்சா போன்ற போதை பொருள்களைச் சாப்பிடுபவர்கள் ஆகியவர்களுடன் சேர்ந்திருப் பதும் தீமையையே விளைவிக்கும்.

சில சாதகர்கள் குறைபட்டுக் கொள்கிறார்கள். "நாங்கள் கடந்த பதினைந்து ஆண்டுகளாக சாதனைகள் புரிந்து வருகிறோம். எங்களுக்கு இதுவரை குறிப்பிடத்தக்க எந்த ஆன்மீக முன்னேற்றமும் ஏற்படவில்லை". இதற்கான ஒரே பதில், அவர்கள் தீய சேர்க்கையைப் பூர்ணமாய் விலக்கவில்லை என்பதே.

நாற்றுகளை வேலியிட்டுக் காப்பது போல, சாதகன் ஆரம்பத்தில் வெளிப்புறக் கவர்ச்சி

களிலிருந்து மிகவும் ஜாக்கிரதையாகத் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். இல்லையெனில் அவன் முழுவதும் அழிந்து விடுவான்.

## ஞானிகள் சேர்க்கை

எங்கும், எப்பொழுதும், எல்லா வழிகளிலும் தீயோர் சேர்க்கையைத் தவிர்க்க வேண்டும். ஞானிகள், துறவிகள் ஆகியோர் சேர்க்கையை நாடவேண்டும். அவர்கள் உன் மனப் புண்ணை ஆற்றுவார்கள்; உனக்குப் புதிய உற்சாகத்தை ஊட்டுவார்கள், இளமையைக் கொடுப்பார்கள்; உனக்கு மகிழ்ச்சி நிறைந்த வளமான வாழ்க்கையைக் கொடுப்பார்கள்.

சத்சங்கத்தின் பெருமையும், சக்தியும் பாகவதம், ராமாயணம், மஹாபாரதம் போன்ற புனித நூல்களிலும், கபீர், துளசிதாஸர், சங்கரர், குருநானக் போன்ற மஹான்களின் நூல்களிலும் விளக்கமாக சொல்லப் பட்டிருக்கின்றன.

விவேகானந்தர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சத்சங்கத்திலும்; ஞானதேவர், நிவ்விருத்திநாதர் சத்சங்கத்திலும்; கோரக்நாதர், மச்சியேந்திர நாதர் சத்சங்கத்தில் சேர்ந்து இருந்தனர். அக் குருமார்களின் காந்த சக்தி, ஆன்மீக அலைகள், கைவந்த சித்திகள் ஆகியவை சிஷ்யர்களை பெரிதும் மாற்றி விட்டன. அவர்களின் சத்சங்கம் சிஷ்யர்களை வானளாவிய உயரத்தில் கொண்டு சென்று விட்டன. ஒரு விளக்கு இன்னொரு விளக்கை ஒளி பெறச் செய்வது போல, ஒருவர் உள்ளம் மற்றொருவர் உள்ளத்தை உயர்த்தி விட்டது.

இந்தியா போன்ற கீழ்த்திசை நாடுகளில், குருமார்களின் சத்சங்கத்தில் கலந்துகொண்டு, அவர்கள் புத்திமதியின்படி நடக்கும்படி மாணவர்கள் உபதேசிக்கப் படுகின்றனர். அதனுல் மாணவர்கள் உள்ளத்தில் உறையும் அன்பு, ஆர்வம் பொங்கிப் பெருகிட வாய்ப்பு ஏற்படுகிறது. பலம் வாய்ந்த ஆத்மாக்கள் மட்டுமே தன்னைப் பிரகாசத்துடன் வைத்துக் கொண்டிருக்க முடியும். சிஷ்யர்கள், குருமார்களின் உபதேசத்தைக் கடைப்பிடித்து முன்னேற வேண்டும்.

## சத்சங்கத்தின் மகிமை

சாதகன் மோட்சம் அடைவதற்கு சத்சங்கம் பெரிதும் உதவுகிறது. ஞானியுடன் ஏற்பட்ட ஒரு நிமிட சத்சங்கம், ஒரு நாட்டின் மன்னனின் ஆட்சியைவிட சிறந்தது. சத்சங்கம் எல்லா நன்மைகளையும் கொடுக்கிறது. உலக பந்தபாசங்களுக்கு புதிய விளக்கத்தைக் கொடுக்கிறது; ஆத்ம முன்னேற்றப் பாதையின் திசையில் மாற்றுகிறது; அது மோஹத்தை அழிக்கிறது. பாரபட்சமற்ற நிலை ஏற்படுத்துகிறது. ஒருவனை நேர் பாதையில் கொண்டு வந்து, உள்ளத்தில் அறிவுச் சூரியனை பிரகாசிக்கச் செய்கிறது. நீ சத்சங்கத்தில் இருந்தால் எந்த தீர்த்த ஸ்தலத்திற்கும் போக வேண்டிய அவசியமில்லை. அது தீர்த்தஸ்தலங்களுக்கும் மேலான தீர்த்தஸ்தலம். சத்சங்கம் இருக்குமிடந்தோறும் புனிதமான திரிவேணி சங்கமம் இருக்கிறது.

சத்சங்கத்தைப் போன்று நம்மைத் தூண்டுவதும், மேலான எண்ணங்களை ஏற்படுத்துவதும், ஆறுதல் கொடுப்பதும், ஆனந்தத்தைக் கொடுப்பதும், வேறு ஒன்றும் இல்லை. சத்சங்கம் எல்லாவற்றிற்கும் மிக மேலாக புனிதப் படுத்துவதும்,

நன்மை அளிப்பதுமாகும். சத்சங்கத்தில் இடையருது இருப்பவர்களுக்கு இறைவனிடமும், மறை நூல்களிலும் ஆழ்ந்த நம்பிக்கை ஏற்படுகிறது; இறைவனிடம் பக்தி ஏற்படுகிறது. சத்சங்கம் தவருது தன் பலனை அளிக்கிறது.

தர்ம வழியாகிய அறத்தின்வழி நிற்போர், மற்றவர்களுக்கு நன்மையே செய்யும் மேலானவர்கள் ஆகியோர்களுடன் சேர்வதும், அவர்களுக்குத் திருத்தொண்டு செய்வதும்தான் சத்சங்கம். அவ்வாறு செய்வதால் ஒருவருக்கு ஆத்ம ஞானமும், பரம்பொருளின் உணர்வும் உண்டாகிறது. அதனுல் லௌகீக பொருள்கள் மீது வெறுப்பு உண்டாகிறது. அதுவே வைராக்யம் ஆகும். அவர் எண்ணமெல்லாம் கடவுள் மீதே லயித்திருக்கும். அதுவே பக்தியாகும். அப்போது அவர் இறையருளுக்குப் பாத்திரமாகிருர். கடவுளின் செல்லக் குழந்தையாகிருர். அவருக்குக் கடவுளின் சாக்ஷாத்காரம் — தரிசனம் கிடைக்கிறது.

சதாசாரியரான குருமார்களின் உபதேசங்களை கேட்டமாத்திரத்தில் சிஷ்யர்களின் உள்ளம் தூய்மை அடைகிறது. இறைவனின் பாத கமலங்களை அடைகிருர்கள். துஷ்டர்களான ஜகாய், மதாய் போன்ருேரும், கொள்ளைக்காரனுன ரத்னுகரனும், ஞானிகளின் சத்சங்கத்தினுல் மாறினவர்களே!

## இல்லறத்தார்கள் சந்நியாசிகளிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

சத்சங்கம் மோட்சம் என்னும் மறுகரைக்கு பத்திரமாகக் கொண்டு செல்லும் படகாகும். நீ அதைத் தவறவிடக் கூடாது. உன் சக்தியினுல்

முடிந்தவரை அடைய முயற்சிக்க வேண்டும். இல்லறவாசிகள் உள்ளத்திலே பக்தி பாவத்துடனும், கையிலே பழங்களுடனும் சந்நியாசிகளைத் தரிசிக்க வேண்டும். சந்நியாசிகளைத் தரித்தவுடன் பக்தி பாவத்துடனும், பிரேமையுடனும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். இல்லறவாசிகள் சந்நியாசிகளைச் சந்திக்கும் போது கீழ்க் கண்டவற்றை மறவாது கடைப்பிடிக்க வேண்டும்; சந்நியாசிகளின் பூர்வாஸ்ரம வாழ்க்கையைக் கேட்கவே கூடாது. அவர் பிறந்த ஊர், முந்தைய தொழில், வயது, கல்வித் தகுதி ஆகியவற்றையும் கேட்கவே கூடாது. இது மிகக் கண்டிப்பானது. ஏன் என்றால் தற்பொழுது அவர்கள் ஆத்மாவில் ஜீவித்திருப்பவர்களாதலால் முந்தைய வாழ்க்கை யாவும் அவர்களுக்கு இறந்துபோனவையாகும்.

சந்நியாசிகளின் முன்னால் லௌகீக விஷயங்களைப் பற்றி பேசக் கூடாது. ஆத்மார்த்த விஷயங்களைப் பற்றியோ, இறைவனைக் குறித்தோ கேட்கலாம். கேள்வியில் உண்மை பாவமும், பிரேமையும் கூடி இருக்க வேண்டும். மூடத்தனமான கேள்விகளையோ, நகைச்சுவைக்காகவோ எதுவும் கேட்கக் கூடாது. சந்நியாசிகளின் நேரத்தையும் வீணாக்கக் கூடாது.

இல்லறவாசிகள் தம்முடன் சந்நியாசிகளுக்குப் பரிசுப் பொருளாக கௌபீனத்தைக்கொண்டு செல்ல வேண்டும். அவைகளைத் தம்வீட்டிலே காவி நிறத்தை ஏற்றியிருக்க வேண்டும். சந்நியாசிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்ய ஏதாவது பொருள்களைக் கொடுத்து சேவை செய்ய விரும்பினால், இல்லறவாசிகள் பக்தி பாவத்துடனும், பிரேமையுடனும் அணுக வேண்டும்.

வெறும் வாய் வார்த்தைகள் மிகவும் கண்டிக்கத் தக்கன. சந்நியாசிகள் பூலோகத்தின் கண்கண்ட கடவுள்கள். துறவிகளுக்குச் சேவை செய்வதைவிட மேலான யக்ஞமோ, தியாகமோ வேறு எதுவும் இல்லை.

## சத்சங்கம் கிடைத்தல்

தற்காலத்தில் இல்லறவாசிகள், நல்ல மஹாத்மாக்கள் கிடைப்பதில்லை எனப் புகார் கூறுகிறார்கள். இது ஒரு நொண்டிச் சாக்கு. சாதுக்கள் கிடைப்பது நமது தேவையைப் பொறுத்தது. நமக்கு உண்மையிலேயே சாதுக்கள் தேவைப்பட்டால், நம் தேவைக்கு ஏற்ப கிடைப்பார்கள். இது இயற்கையின் மாறாத சட்டம். உனக்கு உண்மையில் அருள்தாகம் இருந்தால், அதற்கேற்ற சாது உன் வாசற்படியிலேயே கிடைப்பார். நீ மனம் போன போக்கில் உல்லாச வாழ்வை மேற்கொண்டிருக்கிறாய். உன் உள்ளம் முழுதும் அசூயையான வாசனைகள் குடிகொண்டிருக்கின்றன. தெய்வீக வாழ்க்கையைப்பற்றி கவலைப் படுவதில்லை. நீ வாழ்நாளை வீண் அரட்டை அடிப்பதிலும், லௌகீக விஷயங்களிலும் ஈடுபட்டிருக்கிறாய். நீ புலன்கள்வழி இன்பங்களிலும், பேராசை, புகழ், அதிகாரம் முதலியவைகளுக்காக அலைகிறாய். இருந்தாலும் ''எனக்கு சத்சங்கம் கிடைப்பதில்லை'' எனக் குறைபட்டுக் கொள்கிறாய். முதலில் உன்னை நீ திருத்திக்கொள். உன்னுடைய தவறுகளை ஒத்துக்கொள். உன் தவறுதல்களுக்காக வருந்து. பிராயச்சித்தமாக உண்ணா விரதமிரு. தனிமையில் கதறி அழு. முதலில் சத்சங்கத்திற்குத் தகுந்தவனாகு. மஹாத்மாக்கள் உன்னைப்போன்ற சாத்கர்களைப்பெற ஆயத்தமாகக் காத்திருக்கிறார்கள். அவர்கள் எங்கும் இருக்கிறார்கள்.

அவர்களை உண்மையாகத் தேடுபவர்கள் இல்லை. ஆகையால் மஹாத்மாக்கள் சொல்கிறார்கள், ''இறை உணர்வை அறிய நாட்டமுள்ளவர்கள் இல்லை'' என்று.

உண்மையான குருவைக் கண்டாலும்கூட, அவர்களை உன்னால் அடையாளம் கண்டுகொள்வது கடினம். ஏனெனில் அவர்கள் பொதுவாகத் தன் பெருமையை வெளிப்படுத்தமாட்டார்கள். தற்காலத்தில் வசிக்கும் ஒரு சாதகன் தன் கடும் முயற்சியினால் பெரும் ஆற்றலைப் பெறுகிறான். மற்றொரு சாதகன் முற்பிறவியில் அருளைப் பெற்றிருக்கிறான். அவர்கள் இருவர் மட்டுமே ஒரு மஹாத்மாவின் பெருமையை உணர முடியும். அவர்களின் அருளைப் பெற முடியும். முயற்சி அற்றவர்கள் இவ்வுலகில் ஒன்றும் செய்ய முடியாது.

## மறைமுக சத்சங்கம்

உயிர்வாழும் எந்த மஹாத்மாவின் சத்சங்கமும் உனக்குக் கிடைக்கவில்லையானால், ஞானிகள் எழுதிய நூல்களைப் படிப்பதை மேற்கொள்ளலாம். மஹாத்மாக்கள் எழுதிய புத்தகங்களைப் படிப்பதன் மூலம் அம்மஹாத்மாக்களின் சத்சங்கத்தைப் பெறலாம். இது ''மறைமுக சத்சங்கம்'' எனப்படும். நீ அப்புத்தகங்களைப் படிக்கும்போது அவர்களின் புனிதமான சத்சங்கத்தில் இருக்கிறாய். நீ ''விவேக சூடாமணி'' படிக்கும்போது ஸ்ரீமத் சங்கராச்சாரியரின் சத்சங்கத்தில் இருக்கிறாய்; நீ ''யோகவாசிஷ்டம்'' படிக்கும்போது ஞானி வசிஷ்டரின் சத்சங்கத்தில் இருக்கிறாய்.

மாலை நேரத்தில் நான்கு அல்லது ஐந்து பேர்கள் ஒரு கோவிலிலோ அல்லது ஒரு அமைதியான இடத்திலோ ஒன்றுகூடி ஸ்ரீமத் பகவத் கீதை,

உபநிடதம், இராமாயணம், யோகவாசிஷ்டம், பாகவதம் ஆகியவைகளில் ஏதேனும் ஒன்றைப் படிக்கலாம். இது ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் நீடிக்கலாம். மெதுவாக உன்னையறியாமலே உன் மனம் தூய்மைபெறும். ஆன்மீக வாழ்க்கையில் உனக்குப் பற்றுதல் ஏற்படும். இந்த முறையை பெண்களும் பின்பற்றலாம்.

இடையறாது சத்சங்கத்தில் இரு. அளவு கடந்த நன்மையைப் பெறுவாய். வாழ்க்கை மிகக் குறுகியது. நிலையற்றது. மரணம் உன்னை விழுங்க எந்த நேரமும் காத்திருக்கிறது. ''நாளை'' என்பது ஒருபோதும் வராது. இந்த வாழ்க்கையில் பெற்ற மானிடப் பிறவி மீண்டும் கிடைக்காது. சத்சங்கத்தின் மூலம் ஆத்ம ஞானத்தைப் பெற்றிட சகல வழிகளிலும் முயற்சி செய். சத்சங்கத்தின் மூலம் சத்—சித்—ஆனந்தத்தைப் பெறு. அப்போது தான் நீ விடுதலை அடைவாய்.

---

# பக்தி

இறைவனைச் சார்ந்திருத்தல் பக்தியாகும். அது நதியைப் போன்று இடையறாது செல்வதாகும். ஒரு பாத்திரத்திலிருந்து மற்றொரு பாத்திரத்திற்கு எண்ணெயை ஊற்றும் போது தைலதாரையைப் போல் இடையறாது கடவுளை நேசிப்பது பக்தியாகும். காந்தம் ஊசியைக் கவர்வது போன்று, இறைவன் ஜீவர்களைக் கவர்வது பக்தியாகும்.

பக்தி இறையுணர்வுக்காகச் செய்யப்படுவது. இறைவனை மட்டுமே பக்தன் அடைய விரும்புகிறான். பக்தனுக்கு சுயநலம் கிடையாது; அச்சமும் கிடையாது. தன் தந்தை செஷன்ஸ் நீதிபதியானாலும் தனயன் பயப்படுவானா? மனைவி கணவனைக் கண்டும் அஞ்சுவாளா? அது போலவே பக்தன் எல்லாம் வல்ல இறைவனைக் கண்டு அஞ்சமாட்டான். தன் தவறுதல்களுக்கான பிராயச்சித்தத்திற்காக பக்தன் அஞ்சமாட்டான். தன் இஷ்டதெய்வம் அன்பின் பெருங்கடல் என்று பக்தன் உணர்கிறான், நம்புகிறான்.

பக்தி மனிதனை இறை நிலைக்குக் கொண்டு செல்கிறது; பக்தனுக்கு அன்பெனும் போதையைக் கொடுக்கிறது; சாசுவதமான நிம்மதியைக் கொடுக்கிறது; பக்தனை பூரணன் ஆக்குகிறது; புலன்களின் வழியிலிருந்து அவனைக் காக்கிறது. இறைவனுடன் ஐக்கியத்தை ஏற்படுத்துகிறது.

திடீரென எழும் உணர்ச்சிப்பெருக்கு பக்தி ஆகாது. வெறித்தனமும் பக்தி ஆகாது. பக்தி, தூய அன்பு. நமது அறிவையும், எண்ணத்தையும் இறைவனின் பக்கமாகத் திருப்புவது பக்தி. அது

இறைவன் மீதான எல்லையற்ற அன்பு. பக்தியே கனிந்து ஞானமாக மலர்கிறது. அது இறையுணர்வைக் கொடுக்கிறது.

நமது உள்ளத்தின் மூலம் இறைவனை நேரடியாக அடைவது பக்தியாகும். பக்தி யாவருக்கும் பொதுவானது.

## கதவுகள் எல்லோருக்கும் திறந்திருக்கின்றன

பக்தியை அனைவரும் எல்லா நிலைகளிலும் வேறுபாடின்றிச் செய்யலாம். அதற்கு நிறைந்த கல்வி, கட்டுப்பாடு, வேதாந்திகளின் அறிவு, பிரகாசமான அறிவாற்றல் முதலியன தேவையில்லை. அதற்கு வேண்டுவதெல்லாம் இடையருத இறைவன் சிந்தனையும் நம்பிக்கையுமே. அதனால்தான் பாமரனுக்கும் பக்தி எளிதாகிறது.

நிஷதா தாழ்ந்த குலத்தில் பிறந்தான்; சபரி காட்டில் வசித்த பெண்; துருவன் கல்வி கற்காத சிறுவன்; விதுரனும், சுதாமனும் மிகவும் ஏழைகள்; விபீஷணன் ஓர் அரக்கன். ஹனுமான் ஒரு குரங்கு; ஜடாயு ஒரு பறவை; கஜேந்திரன் ஒரு யானை; பிருந்தாவனத்தில் வசித்த கோபியர்கள் வேத அனுஷ்டானங்களை அறியாதவர்கள். இவர்கள் எல்லாம் தம்முடைய இடையருத பக்தியினாலும், ஆத்ம சமர்ப்பணத்தினாலும் இறையுணர்வை அடையவில்லையா ?

## இறைவனை அடைய எளிய வழி

இறைவனை அடைய பல வழிகளிலும் மிக எளிமையானது பக்தியே. ஞான மார்க்கத்திலும், யோக முறைகளிலும் தவறிப்போகும் சாத்தியக் கூறுகள் உள்ளன. பக்தி மார்க்கத்தில் பக்தன் இறைவனின் எல்லையற்ற அன்பையும் ஆதரவையும் பெறுவதால், அந்த அச்சம் உண்டாவதில்லை.

ஞான மார்க்கத்திலும், யோக முறையிலும் வெற்றி பெற்றவர்கள் தமது ஆற்றல்களுக்காகவும்; விவேகத்திற்காகவும் கர்வம் அடையக்கூடும். ஆனால் பக்தர்கள் எப்பொழுதும் பணிவாக இருப்பார்கள். ஏனென்றால் அடக்கமே பக்தி மார்க்கத்தின் அடித்தளமாகும்.

ஞான யோகம் விவேகத்தின்பாற்பட்டது. பகுத்துப்பார்ப்பதும், மறுப்பதுமே அதன் வேலை யாகும். அதன் வழி நெடுக மறுத்து ஒதுக்குவது எல்லையற்று இருக்கிறது. ஆகையால் இவ் வழியை ஒரு சிலரே மேற்கொண்டு, வெற்றிபெற முடியும்.

ராஜ யோகமும் மிகவும் கடினமானதே, நீ அதில் எண்ண அலைகளைக் கட்டுப்படுத்தி அமைதி பெறச் செய்ய வேண்டும், முடியுமா? கடல் அலை களைக் கட்டுப்படுத்த முடியாத முயற்சி போன்றதே இதுவும். அத்துடன் மிக உயரமான சிகரத்தின்மீது ஏறுவது போன்று கடினமானது; அதற்கு மிகப் பெரிய எண்ண ஆற்றலும் தேவைப்படுகிறது. இத்தகைய கஷ்டங்கள் எல்லாம் பக்திக்குக் கிடையாது. சம்சாரம் என்னும் சேற்றிலிருந்தும் உன்னை மீட்க தன் இரு கரங்களையும் நீட்டி, காப்பாற்ற எப்பொழுதும் ஆயத்தமாக இருக்கிறான் இறைவன். நீ செய்ய வேண்டுவ தெல்லாம் இறைவன் திருவடிகளை உறுதியாகப் பற்றிக் கொள்வதே. அதைத் தவிர வேறு சிந்தனை இருக்கக் கூடாது.

## பக்தியில் மனது ஒருமுகப்படுதல்

குழந்தை எப்பொழுதும் தன் தாயை மட்டும் நினைத்துக் கொண்டிருக்கிறது; பாசமிக்க கணவன் தன் மனைவியை நினைத்துக் கொண்டிருக்கிறான். அதே போன்று மனைவியும்; பேராசையுடையவன். எப்பொழுதும் பணத்தைப் பற்றி மட்டுமே

நினைத்துக் கொண்டிருக்கிறான். அதே போன்று பக்தனும் எப்பொழுதும் தன் இஷ்ட தேவதையை மட்டுமே நினைத்துக் கொண்டிருக்கிறான். அதனால் அவன் இறைவனை எளிதில் சாக்ஷாத்காரம் செய்கிறான்.

லௌகீகப் பொருள்கள் யாவும் இறையுணர்வுக்கு எதிரிகள். மனைவி, மக்கள், சொத்து, கால்நடைகள், வீடுகள், நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரும் விரோதிகளே. இவர்களை உதாசீனம் செய்ய வேண்டும்.

உன் உடலைப்பற்றியும், அதன் தேவைகளைப் பற்றியும் அதிகம் நினைத்தால், இறைவனைப்பற்றி நினைக்க முடியாது. அனாத்மா பொருட்கள் நமக்கு ஒரு பொருட்டல்ல.

பக்தன் ஒருவன் இறைவனைச் சில சமயங்களிலும், மனை, மனைவி, மக்கள், செல்வம் ஆகியவற்றை சில சமயங்களிலும், நினைத்தால், அதற்கு ''வியபசாரிணி பக்தி'' என்று பெயர்; மனம் ஒரு முகப்படாத பிளவுபட்ட பக்தி ஆகிறது.

இறைவன் பக்தனை பல கடும் சோதனைக்கு உள்ளாக்குகிறான். பக்தன் தன்னை முழுதும் இறைவனுக்கே சொந்தமாக்கும்போது இறைவன் பக்தனுக்கு அடிமையாகி விடுகிறான். துகிலுரியப் பட்ட திரௌபதிக்குக் கண்ணன் எடுத்த எடுப்பிலேயே உதவி செய்யவில்லை. அவள் 'தான்' என்ற அகந்தையை முழுதும் இழந்து, ஆதரவற்ற நிலையில், ''ஓ துவாரகநாதா! என் அன்பே! என்னைக் காப்பாற்று!'' என்று ஓலமிட்டபோது, கண்ணன் ஓடோடி வந்து, அவள் மானத்தைக் காத்தான்.

பொதுவாக பக்தனுக்குத் தன்னலம் முற்றிலும் இல்லாதிருப்பது அரிது. தன்னுடைய ஆசைகளை

முற்றிலும் இழந்துவிடுவது கடினமாகிறது. ஆகையால் முழு ஆத்ம சமர்ப்பணமும் அரிதாகிறது. இதையும் கடந்தவனுக்கே இறையுணர்வு கிடைக்கிறது.

## பக்தியும், ஆசைகளும்

ஆசை பக்தியின் வளர்ச்சியைத் தடுக்கிறது. லௌகீகப் பொருள்களின் மீதுள்ள பற்றை விடுகிற அளவுக்குப் பக்தியின் ஆற்றல் அதிகரிக்கிறது.

துறவு நிலையே இறையுணர்வுக்கு அடிப்படை.

ஆசையும், பக்தியும் இரண்டும் ஒன்று சேர்ந்து இருக்காது. முக்தி அடைய வேண்டும் என்ற ஆசையும் இருக்கக் கூடாது. இறைவனும், அவனுக்கான சேவையுமே பக்தன் மனதில் இருக்க வேண்டும். முக்திநிலை கேட்காமலே வந்து எய்தும்.

## பக்தியை வளர்ப்பது எப்படி!

''கண்ணால் காணாத இறைவன்மீது பக்தியை வளர்ப்பது எப்படி?'' என மக்கள் கேட்கிறார்கள்.

ஞானிகளின் சத்சங்கத்தில் இரு. இறைவனின் லீலையைக் கேள். புனிதமான வேதங்களைப் படி. உலகத்தில் உள்ள பொருள்களில் எல்லாம் இறைவனின் தோற்றத்தையே பார். எந்த உருவத்தையும் இறைவனாகவும், குருவாகவும் நினைத்து வணங்கு. அவன் திருநாமத்தை உச்சரி. அவன் பெருமையைப் பாடு. ஓராண்டு காலம் அயோத்தியா, பிருந்தாவனம், சித்ரகூடம், பண்டரிபுரம், காசி, ரிஷிகேசம் ஆனந்த குடில் ஆகிய ஏதாவது ஒரு இடத்தில் வசி. பக்தி பாவத்தை உன் உள்ளத்தில் வளர்த்துக்கொள். இது இறை உணர்வுக்கு வழிசெய்கிறது.

பக்தி பாவத்தை வளர்க்கும் செயல்களையே செய். பூஜை அறையை மிகத் தூய்மையாய் வைத்துக் கொள். அவ்வறையை அலங்கரி. ஊது பத்திகளைக் கொளுத்தி வை. விளக்கு ஏற்றி வை. ஆசனத்தைச் சுத்தமாக வைத்திரு. அன்றாடம் விடியற்காலையில் ஸ்நானம் செய். தூய்மையான ஆடைகளை அணிந்துகொள். நெற்றியில் திருநீற்றையும் குங்குமத்தையும் அணி. ருத்ராக்ஷ மாலை, அல்லது துளசி மாலையை அணிந்து கொள். இச் செயல்கள் உன் உள்ளத்தில் பக்தி பாவத்தை உண்டாக்கி, உள்ளத்தை உயர்த்துகிறது. இறை உணர்வுக்கு வழி செய்கிறது.

நன்னடத்தை, சத்சங்கம், ஜபம், நாம ஜபம், கீர்த்தனை, வழிபாடு, பஜனை, ஞானிகளுக்குச் சேவை செய்தல், திருத்தலங்களில் வசித்தல், இறை பாவத்துடன் ஏழைகளுக்கும், நோயாளி களுக்கும் தொண்டு செய்தல், வருணாசிரம தர்மத் தைக் கடைப்பிடித்தல், நீ செய்யும் எல்லாக் கர்மத்தின் பலனையும் இறைவனுக்கு அர்ப்பணித்து விடுதல், இறைவனின் திருவுருவத்தை எல்லாப் பொருள்களிலும் உணர்தல், ஞானிகளுக்கு சாஷ் டாங்க நமஸ்காரம் செய்தல், புலன் இன்பங்களைத் துறந்து விடுதல், தர்மம், அடக்கம், நோன்புகளை அனுஷ்டித்தல், அஹிம்சையைக் கடைப்பிடித்தல், உண்மை பேசுதல், பிரம்மச்சரியம் கடைப்பிடித்தல் ஆகியவை பக்தியை வளர்க்க உதவும்.

## பக்தி யோகத்தில் பாவங்கள்

பக்தியில் ஆறு வகையான பாவங்கள் உள்ளன: (1) சாந்தி பாவம். பக்தன் அமைதியாக இருப் பான். அவன் உள்ளத்தில் அன்பும், மகிழ்ச்சியும் நிலைத்திருக்கும். பீஷ்மர் இதற்குச் சரியான

எடுத்துக்காட்டு. (2) தாஸ்ய பாவம், ஸ்ரீ ஹநுமான் இதற்கு எடுத்துக்காட்டு. அவன் ஸ்ரீ ராமனுக்கு அடியவனுகத் தொண்டு செய்தான். எல்லா வழிகளிலும் ராமனே மகிழச் செய்தான். ஸ்ரீ ராமன் தொண்டிலேயே ஆத்ம இன்பத்தைக் கண்டான். (3) சக்ய பாவம், இறைவனையே தோழனுகக் காணல். அர்ச்சுனனும், கண்ணனும் தோழமை உணர்வுடன் சமமாகப் பழகினுர்கள். இருவரும் ஒன்றுகவே உண்டு, உரையாடி இருந்தனர். (4) வாத்சல்ய பாவம், பக்தன் இறைவனைக் குழந்தையாகக் காணல். யசோதை கண்ணனைக் குழந்தையாகப் பெற்றுள். இறைவன் உன் செல்லக் குழந்தையாக இருப்பதால், உனக்குப் பயமே வேண்டாம். பக்தன் தாயாக இருந்து இறைவனுக்கு உணவு ஊட்டவும், தொட்டிலில் இட்டு தாலாட்டியும் தொண்டு செய்கிறுன். (5) சாக்ய பாவம் அல்லது கோபி பாவம். ராதையும், கண்ணனும் பிரிந்திருந்த காலத்தில் கோபியர்கள்தாம் அவர்கள் இருவரையும் சேர்த்து வைத்தனர். ராதையையும், கண்ணனையும் எப்பொழுதும் ஒன்றுகவே கண்டனர். அவர்கள் இருவரும் சேர்ந்திருப்பதிலேயே தங்கள் இன்பத்தைக் கண்டனர். (6) மதுர பாவம் அல்லது கண்ட பாவம். இதுதான் பக்திபாவத்தில் பிரதான மானது. ராதை, கிருஷ்ணன் ஆகிய இருவருக்கும் இடையே இருந்த பாவம். இது ஆத்ம சமர்ப்பண பாவம். காதலனும், காதலியும் ஒன்றுபடுதல். பக்தனும், இறைவனும் தான் மற்றவராக உணர்ந்து காதலின் மேன்மையை உணர்தல். இதுவே சேர்க்கையில் பிரிவும், பிரிவில் சேர்க்கை பாவமாகும். கணவன், மனைவி இடையே உள்ள இணக்க பாவமாகும். ஜெயதேவர், மீரா, ஆண்டாள் முதலியோர் இப்பாவத்தைக் கையாண்டனர்.






# அபர பக்தியும் பரபக்தியும்

பக்தி இரண்டு வகைப்படும். அவை அபர பக்தி, பரபக்தி ஆகும். அபர பக்தி தாழ்ந்த தரத்தை உடையது. இதில் பக்தன் போதிய அனுபவம் இல்லாதவன். அவன் சாஸ்திரங்களையும், சடங்குகளையும் அனுசரிக்கிறான். அவனுக்கு பரந்த மனம் இல்லை. வேறு இறைவனை வழிபடுபவர்களை அவன் வெறுக்கிறான்.

பரபக்தி வகையைப் பின்பற்றுகின்றவன் மனம் பிரபஞ்சம் முழுவதையும் விரும்புகிறது. அவன் உள்ளத்தில் விஸ்வ பிரேமை குடிகொண்டிருக்கிறது. பிரபஞ்சமே அவனுக்கு பிருந்தாவனம். இறைவன் தொழுகைக்காக அவன் கோயில்களுக்குப் போவதில்லை. எல்லாப் பொருள்களிலும் இறைவனின் திருஉருவத்தைக் காண்கிறான். எல்லாத் தோற்றங்களும், செயல்களும் இறைவனின் லீலைகள் என உணருகிறான். அசிங்கமான பொருள்கள், சண்டாளர்கள், புலையன், பிச்சைக்காரன், நோயாளி, பரத்தை, கள்வன் இவர்கள் யாரையும் வெறுப்பதில்லை. பரபக்தி பக்தன் சொல்கிறான்: ''எல்லா இடங்களிலும் என் இஷ்ட தெய்வத்தையே காண்கிறேன். அரசனாக இருப்பவனும், ஆண்டியாக இருப்பவனும், தீயவனாக இருப்பவனும், தாழ்ந்தவனாக இருப்பவனும் என் ஹரியே''. இதுவே பக்தியின் மிக மேலான மன நிலையாகும். இதை வார்த்தைகளில் வர்ணிக்க முடியாது; உணரத்தான் முடியும். மீரா, கௌரங்கர், ஹாபீஸ், துளசிதாஸ், கபீர், ராமதாஸ் ஆகியோர் இந்நிலையைக் கடைப்பிடித்தனர்.